# விவாகச்சருக்கம்.

சித்தசுத்தியடைந்த நைமிசாரணிய முனிவர்கள் சூதமுனிவரை வணங்கி நின்தயாபரமூர்த்தியே! அடியேங்களுய்யும்பொருட்டு அகத்தியர் சரித்திரத்தைக் கூறினீர். இன்னும் உமது திருவாக்கால் பரமேசன் திருமணக்காதையையுங்கேட்க, ஆவல் கொண்டோமென்று வேண்ட சூதபுராணிகர் சொல்லத் தொடங்கினார். கேளுந் தபோதனர்களே! கயிலாயபதியான் கட்டளைப்படி மயிலுருவடைந்த உமையம்மையார் தாலையம்பதிப்பரமனைப் பூசைசெய்து துதித்திருக்க, அப்போது சாம்பவ மூர்த்தியெதிரில் தோன்றி அம்மை யாருக்குக் காட்சிதந்து பாவாய்! முன்னம் உனக்கு நான் கொடுத்த சாபம் இன்றோடொழிந்தது. இனி உன்னை இந்நகரத்தில் தேவர் முனிவர் முதலிய யாவருங் காணத் திருமணஞ் செய்வேனென்று அம்மையார் மகிழக்கூறி தன தருகிலிருந்த திருமால்முகத்தை நோக்கி மாயவனே! இந்தப்பர்வத ராஜபுத்திரியை இவ்விடத்திற்றானே சித்திரை மாசத்தில் வரும் மக நக்ஷத்திரத்தில் திருமணஞ் செய்ய வேண்டியதால், அதற்குரிய முயற்சி செய்வா யென்று சிவபிரான் கட்டளையிட, திருமால் தகுதி யமைந்த பல சிவகணங்களை யழைத்து லோகமாதாவாகிய உமாதேவியாருக்கும் சர்வ ஜீவதயாபரனாகிய சிவபெருமானுக்கும் திருமணம் நடக்கின்றதென்று கூறி எல்லாத் தேவர்களையும் இவ்விடத் தழையுங்களென்று விடுத்தார்.

அஷ்டதிக்குப் பாலகர்களும் தேவர்களும் வித்தியாதரர்களும் நாகலோகத்தார்களும் சூரியன் முதலிய நவக்கிரகங்களும் காந்தர்வர்களும் இயக்கர்களும் பிரமன் முதலியோர்களும் வைகுந்தத்தி லுள்ளவர்களும் கயிலாயத்திலுள்ளவர்களும் ஆகிய யாவரும் வந்து அங்கடைந்தார்கள். திருமாலின் கட்டளைப்படி அவ்விடத்துத் தேவகம்மியன் தூய்மையாகிய இரத்தினங்களால் ஒளிவிளங்க அழகிய மண்டபங்களும் குளிர்ச்சி பொருந்திய முத்துக்களினால் திருமணப் பந்தல்களும் நிருமித்தான். அந்நகரத்திலுள்ள பெண்கள் அலங்காரமாக வீதிகளில் வாழை கமுகு கொடி தோரணம் முதலியவைகளை நாட்டி பூரணகலசம் பாலிகை விளக்கு முதலிய அஷ்டமங்கலங்களமைத்து, அன்புடன் கைகோத்து விளையாடுவார்கள். இவ்விதச் சிறப்பமைந்த தாலையம் பதியில் மண்ணுலகத்தவரும் விண்ணுலகத்தவரும் நாகலோகத்தவரும் சிவபிரான் திருமணத்திற்காக அன்போடு வந்து நெருங்கியிருக்க, அப்பொழுது சித்திரை மாசத்தில் மகநட்சத்திரம் கூடிய சுபதினம் வந்ததை யறிந்து இன்றையதினந்தான் திருமணத்தினமென்று திருமால் சிவபெருமானுக்குக்கூறினார். எமது தந்தை யாராகிய சிவபெருமானும் குபேரன் அலங்கரிக்க மணக்கோலங் கொண்டு அத்திருமணத்திற் காக அமைத்துள்ள மண்டபத்தில் வந்து சேர்ந்தார். இப்பால் திருமால் கட்டளைப்படி இலக்குமியும் சரஸ்வதியும் வந்து உமாதேவியாரை ஆடையா பரணங்களாலலங்காரம் செய்து சிவபிரானுக்கு வலப்பாகத்தில் அமைத்தார்கள். அப்போது கற்பகத்தரு காமதேனு சங்கநிதி பதுமநிதி இவைகள் சிவபிரான் திருமணத்திற்கு வேண்டிய பொருள்களை அப்போதைக் கப்போது கொடுத்து ஏவல் புரிந்து நின்று கொண்டிருக்க, அவ்விடத் தடைந்த மகா தவசிகளும் மறையவரும் வேத மந்திரமோத, பிரமன் திருமணத்திற்குரிய சடங்குகளெல்லாம் செய்து முடித்தான்.

மணஞ்செய் முகூர்த்தம் சமீபித்ததென்று பிரகஸ்பதி பகவான் கூற அதைக்கேட்ட பர்வத ராஜன் இனிமையுடன் எழுந்திருந்து தோண் மீது

தரித்திருந்த உத்தரியத்தை இடையிற் கட்டிக்கொண்டு தனது புத்திரியாகிய உமாதேவியாரை தனது மடித்தலத்தில் வைத்துக்கொண்டு நெல்விக்கி மீது உட்கார்ந்து சிவபிரானது பொன்போலும் அழகிய திருக்கரத்தின் மீது தனது புத்திரியினது மெல்லிய திருக்கரத்தை வைத்து மனைவியாகிய மேனு தேவி வார்க்கும் நீரை விட்டான். உடனே தேவதுந்துபி முழங்கத் தேவர்கள் மலர்மாரி பொழிந்தார்கள். மற்றுஞ் செய்ய வேண்டிய சடங்குக ளனைத்தையும் பிரமன் செய்து முடிக்கச் சிவபிரான் வெள்ளிய பொரியைத் திருக்கரத்தா லள்ளி அக்கினிக்கு அவிகொடுத்து சௌந்தர நாயகியாரது சிறுவிரலைப் பிடித்துக்கொண்டு தேவியின் திருவடியைப் பொன்னுலாகிய அம்மியின் மீதெடுத்து வைத்து அருந்ததியின் வடிவத்தைக் காட்டி அக்கினியை வலமாகவந்தார். பின்பு திருவருள் நிரம்பிய சிவபிரானுக்கும் சௌந்தர நாயகியாருக்கும் அநேக அரம்பை மாதர்கள் ஆலாத்தி சுற்றினார்கள். யாவராலுங் காண்டற் கரிய சிவபிரானது கிருபை நிறைந்த திருக்கோலத்தை இத்தலத்தின் கண் தரிசிக்கப் பெற்றோமென்று தேவர்கள் நாகர்கள் முதலானவர்கள் கடவுளைப் பலவாறு வேண்டித் தோத்திரஞ் செய்து வழிபட்டார்கள்.

ஒளி விளங்கும் ஆபரண மணிந்த சௌந்தர நாயகியார் தமது தாய் தந்தையர்களாகிய மேனை பர்வதராஜன் இவர்களது திருவடிகளில் வணங்கினாள். திருமணத்திற்கு வந்த தேவர்கள் முதல் எவர்களுக்கும் முறைப்படி அவ்விடத்து வந்திருந்த காமதேனு திருவமுது படைக்க சந்தனம் புட்ப முதலிய வரிசைகளைக் கற்பகத்தரு கொடுக்க திருமால் உபசார வார்த்தைகள் கூற கொன்றை மாலை யணிந்த மாயூரநாதரும் சவுந்தர நாயகியும் மகிழ்ச்சி யுற்றிருந்தனர். பின்பு சகதீசனாகிய மாயூரேசனும் மயில்போலும் சாயலையுடைய சவுந்தர நாயகி யாரும் மிக்க அலங்கார மமைந்த அத்தாலமா நகரின் திருவீதியி னிடத்துத் திருமணக் கோலம் வரவேண்டி சிவபிரான் இடப வாகனத்தின் மீதும் உமாதேவியார் அன்ன வாகனத்தின் மீதும் ஆரோகணித்து, பலவித வாத்தியங்கள் கடல்போலச் சத்திக்கச் சித்தர் சாரணர் தும்புரு நாரதர் கின்னரர் கிம்புருடர் முதலியோர் இசை பாடிக்கொண்டு வரவும், ஊர்வசி திலோத்தமை முதலிய தேவ மாதர்கள் நாட்டியம் புரிந்துகொண்டு வரவும், இந்திரன் கையில் பிரம்பு கொண்டு வழி விலக்கிவரவும், அக்கினி பகவான் இருளை யகற்றி வரவும், சவுனகாதி முனிவர்கள் ஒருங்கு கூடி வேத பாராயணஞ் செய்து வரவும், மற்று முள்ள தேவர்கள் புடைசூழ்ந்து வரவும் அழகமைந்த அத்தாலமா நகரத்தை வலமாக வந்தார்கள்.

அத்திருமணக் கோலத்தைத் தேவர்களும் நாகர்களும் அத்தாலமாபுரி வாசிகள் முதலாகிய பல தேசத்தார்களும் தரிசித்து வணங்கித் தமது துன்பங்களை நீக்கிச் சந்தோஷ மடைந்தார்கள். பின்பு சிவபெருமான் சிறப்பமைந்த மாடவீதியை வலமாக வந்து ஆகாயத்தை யளாவிய கோபுரவாயிலை யடைந்து அனேகங்கோடி அரம்பை மாதர் கூடி மங்கல வாழ்த்துகள் கூறித் துதிக்க, உள்ளே சென்று திருமண மண்டபத்தில், வீற்றிருந்து திருவருள் சாந்தவராய்த் திருமணத்திற்கு வந்திருந்த தேவேந்திரன் பிரமனாதிய ஒவ்வொருவருக்கும் தக்கவாறு விடை கொடுத்துச் சவுந்தர நாயகி யாருடன் அளவளாவி ஆனந்த சந்தோஷ முற்றிருந்தனர் ஆகையால் அந்த விலாசகாஞ்சி யென்னுந் தாலமா நகரம் எல்லா நகரத்திற்கும் மேன்மை யானதென்று சூதபுராணிகர் நைமிசாரணிய முனிவர்களுக்குச் சொல்லித் தன்னிருக்கை சேர்ந்தார். அவ்வுரையைக் கேட்ட முனிவர்கள் அவரிடம் விடை பெற்று அத்தலத்தை யடைந்து ஸ்ரீ மாயூர நாதரைத் தரிசித்துப் பேரானந்த மடைந்தனர்.

திருமணச்சருக்கமுற்றிற்று.